


ஸ்ரீகற்பகவி[illegible]ணை.

மருதூர் என்னும் பிள்[illegible]

# ஸ்ரீ கற்பகவிநாயகர்

## பதிகம்.

---

இஃது

பிள்ளையார்பட்டி மாஜி மணியம்

நாராயணசாமி அய்யரவர்கள் குமாரர்

**கிருஷ்ணய்யரால்**

இயற்றப்பெற்றது

---

மேற்படியூர் ஸ்ரீமான்கள்

**சுப. நா. நாராயணன் செட்டியாரவர்கள்**

**ராம. மு. கறுப்பன் செட்டியாரவர்கள்**

பொருளுதவியால்

---

மதுரை

மீனலோசனி அச்சியந்திரசாலையில்

அச்சிடப்பெற்றது.

1934.

---

உ

சிவமயம்.

## சாற்றுக்கவிகள்.

இந்நூலாசிரியர் மைத்துனரும், மதுரை ஸெயிண்டு மேரி ஹைஸ்கூல் மாஜி தமிழ்ப்பண்டிதருமான ப்ரும்மஸ்ரீ

மு. கோவிந்தசாமி ஐயரவர்கள் இயற்றியது.

தனதனை நிகர்க்குங் கனதன வணிகர்
மனமொழி மெய்யா லநுதின மேத்தும்
பிள்ளையார் பட்டிப் பொள்ளலங் காத்தோ
னுள்ளுவ வெல்லாங் கொள்ளென வளிப்போன்
தற்பா னுன கற்பக விநாயகன்
பொற்புறுஞ் சரணி லற்பினோர் பதிகம்
வண்டமி ழாலே கண்டினு மினிக்க
மண்டிய சொல்லுந் திண்டிறற் பொருளுஞ்
செறிதர நெடுவை மறையவர் திலகன்
அறுபதி னுண்டு மறுவற மணியஞ்
செப்புமக் கோயிற் றிப்பிய வணிக
ரொப்புற வகித்தோ னப்பணி சடையான்
பொன்னடி துதிப்போ னென்னையு மங்கை
மன்னுமா றறைந்தோ னென்னுயிர் மாமன்
குணமிகு நாரா யணன்றவப் புதல்வன்
அணிபுகழ் சேர்கிருட் டிணனெனும் மறையோன்
வழுவிலா வொழுக்கமே வாய்ந்த
விழுமிய புலவன் விளம்பின னினிதே.

மதுரைத் தமிழ்ச்சங்கம் கலாசாலைப் போதகாசிரியர்
பிர்ம்மஸ்ரீ சு. ஹரிஹரய்யரவர்கள் இயற்றியது.

மாவிந்த மெனப்பொருளார் வணிக மக்கள்
வழுத்துபிள்ளை நகர்கோயில் கொண்டோன் மூங்நாள்
மேவிந்து சடைக்கணிந்தோன் மகிழுங் கற்ப
வேழமுகத் தோன்பதிகம் விளம்பி னானல்
பாவிந்தை யுறப்புகலும் புலவன் காழிப்
பாலரு வாயனின்சீர் கவிசிந் தாச்சொல்
கோவிந்த சாமியெனு மறையோ னம்மான்
குமரனுங் கிருஷ்ணனெனுங் குரிசில் தானே.

---

இந்நூலாசிரியர் மருகன் காரைக்குடி
ர. நாகசாமி அய்யராலியற்றப் பெற்றது.

கன்னலு மமுதுங் கசந்திடத் தமிழிற்
கற்றவ ருவந்திட மருதூர்
நன்னக ருறையுங் கற்பகக் களிற்றி
னறுமலர்த் தாளிலோர் பதிகம்
பன்னின னெடுவைச் சாமமா மறையோன்
பகருநா ராயணன் புதல்வ
னென்னுயிர் மாமன் கிருட்டிண சாமி
யெனுந்தமிழ்ப் புலவர்கோ மானே.

---

உ

# ஸ்ரீ கற்பக விநாயகர் பதிகம்.

## ஸ்ரீ மகாகணபதி காப்பு.

வெண்பா.

சிறப்பாற் பொதுவகையாற் சிந்திக்க நின்ற
திறத்தாய்க் கொருபதிகஞ் செப்பக்—குறித்தேற்கு
நந்தா வளமுறுஞ்சொன் னுவுதிக்கப் பிள்ளைநகர்த்
தந்தா வளமுகத்தாய் தா.

## நூல்.

திருமேவு பாற்கட லிடைப்பிறந் தொளிரிளந்
திங்களொரு கோடி யென்னத்
திகழுமொரு கோட்டுமத வாரணமு கத்திறைவ
செயவிசய வென்று திருமுன்

புருகூதன் முதலாய வானவர்க டானவர்கள்
பொருவில்முனி புங்கவர் குழாம்
பூதகண நாதர்துதி கொண்டமுந்த மானசம்
பூபல மருந்தி யருளே

உருவாகி வீற்றிருந் தருள்செய்யு மய்யனே
உலகமுழு தீன்றளித்த
உமைகௌரி சங்கரி யம்மைகிரு பாகரி
உத்தமி யளித்த குமரா

கருவாதை யொழியவுன் றிருபாத மேதுணை
கன்னல்சூழ் பிள்ளை நகரிற்
கற்பாழி தனின்மேவு கற்பகவி நாயகா
கற்பனை கடந்த பொருளே. (1)

நான்முகன் படைப்பிலே தோற்றமோ ரேழிலே
நரசன்ம மெய்த லெளிதோ
நல்லபடி யாகவே பேரின்ப வீடதின்
ஞாங்கரி லமைந்த தெனவும்
வான்முகர் தோன்றியழி யிந்த்ரத னுவொக்குமிவ்
வாழ்வென்று நன்க றிந்தும்
வன்மைபெறு மும்மலக் கட்டினால் மாலரு
மனமிவை யெலா மறந்து
பான்மணங் கமழும்வாய் மக்கள்மெய் தீண்டலும்
பாவையரை யாலிங் கனம்
பண்ணுவது மின்பமாக் கருதியுழல் பேதையேன்
பாற்கருணை செய்த ருளுவாய்
கான்மலரு குத்தசெந் தேனாறு பாயவிளை
கழனிசூழ் பிள்ளை நகரிற்
கற்பாழி தனின்மேவு கற்பகவி நாயகா
கற்பனை கடந்த பொருளே. (2)

வையகம லர்க்கழல் களுந்திவெளி வானமா
மன்னுபே ரின்ப முடியா
வன்னிமுக மாசைகா தாகவுயி ரனிலமா
வாரிதூ சாக மதியம்
வெய்யகதிர் விழிகளா மேவுபொரு ளாகுமோர்
வெண்மருப் பருள்செய் முக்கண்
வேழமுக மும்பரிதி கோடிசம மென்னவொளி
வீசுநவ ரத்ன முடியுஞ்
செய்யதிரு மேனியுந் துய்யவுப வீதமார்
செப்பமுங் கைக ளைந்துஞ்
சேயுடைய மாபெருந் தொந்தியுந் தாமரைச்
சேவடியு மாகி யார்க்குங்
கையண்டத் தானமா நின்றநீ யய்யனே
கணேசனே பிள்ளை நகரிற்
கற்பாழி தனின்மேவு கற்பகவி நாயகா
கற்பனை கடந்த பொருளே. (3)

பூகாரந் தனிற்கோட்டு நுதியினுற் பாரதம்
 பொறித்தனை மாம கதியோன்
போற்றினை வேதித்த கனியைமதி சேகரன்
 பூவலஞ் செய்தோர்க் கெனச்

சோதர னுடிக்குளே நண்ணமயி லேறினுன்
 சூழ்ந்துமுன் னிகொண் டனை
சூர்தருந் தோல்முகற் சாய்த்துமற் றுருவாய்த்
 தோன்றவா கனமாக் கினை

யாதரங் கொடுபூசை புரியவ்வை யார்கயிலை
 யம்பொருப் புற்று மகிழ
வாற்றினை வியப்பிதுவென் னைக்தொழினின் சந்நிதியி
 லாகுமா லெளிய னேனைக்

காதர மடாதபடி காத்தனிற் கருமையோ
 கணேசனே பிள்ளை நகரிற்
கற்பாழி தனின்மேவு கற்பகவி நாய்கா
 கற்பனை கடந்த பொருளே. (4)

தென்னுசை யிறைவனடு பகடேறி யெதிருறத்
 தேகாதி யிந்தி யங்கள்
செயலாவி தளர்போது சுமுகா நமோநம
 திகழேக தந்தா கயக்

கன்னுய நமதூம கேதுநம விகடநம
 கபிலாய நமவி நாய
காயநம பாலசந்த் ராநமக ணுத்தியக்
 காயநம கந்த வேளின்

முன்னுய வாநமவி லம்போத ராயநம
 முத்தான முறுவே ழமா
முகவாந மோவக்ர துண்டாந மோவிக்ந
 மூர்த்தியே ரம்ப சூர்ப்ப

கன்னுய நமவென்று கூறவருள் புரிகுவாய்
 கணேசனே பிள்ளை நகரிற்
கற்பாழி தனின்மேவு கற்பகவி நாயகா
 கற்பனை கடந்த பொருளே. (5)

விண்ணாதி பூதமோ ரைந்துநீ நாதநீ
வேதநீ வேத முடிவின்
மேவுமெய்ப் பொருளுநீ யென்பதை விளக்கினை
மேருமா மலைவில்லி னேன்
உண்ணாமு லைக்குவெஞ் சாபங்கொ டுத்திடலும்
ஊங்கினி லிருந்த வேட்டா
னுற்றதிது வென்னவவை யாவையுமெ டுத்தெடுத்
தோதமிசை வீச நோக்கி
நண்ணரை வேராறுக் திட்டவேற் கந்தனை
நந்தியைச் சபித்து நின்னை
நாடாதெ ணைமைந்த யார்க்குமுன் னவனுவை
நம்மின்வே றல்லை நீயென்
கண்ணாத வாயென்று கூறிடப் பெற்றதால்
கணேசனை பிள்ளை நகரிற்
கற்பாழி தனின்மேவு கற்பகவி நாயகா
கற்பனை கடந்த பொருளே. (6)

தள்ளரிய கருமமுக் கியமென்ப ரொருசிலவர்
தடையற்ற ஞான மேதான்
தலையாகு மென்பர்சில ரெதுவாகி னும்மனக்
தகவாகி னன்றி யில்லையோ
ரெள்ளளவு பயனுமென் செய்குவே னேழையே
னெயினர்கோன் பாவை பாக
னேத்துமற் புதபங்க யச்சரண் சாணுகி
யெய்தினேன் கேட்டி யெந்தாய்
வெள்ளறிவின்விடையவெங்காட்டிடையெதேச்சையாய்
மேய்த்துமத மாகி யாசை
வெள்ளத்தி லேழுழ்கி நிலையின்றி யலையுமன
வேழமென் வசமா யில்லை
கள்ளமிலை யய்யபா சாங்குசக் கையனே
காத்திநீ பிள்ளை நகரிற்
கற்பாழி தனின்மேவு கற்பகவி நாயகா
கற்பனை கடந்த பொருளே. (7)

சந்ததமு மொருபடித் தாகிநிர்க் குணமாகி
சர்வபரி பூர ணமுமாய்
சச்சிதா னந்தமே வடிவான தெய்வமே
தமியனேன் றுயர்தீர்த் திடச்
சிந்துரமு கத்தொளி பரப்பியெழு மேகமே
செம்மலே யெனவாழ்த் திடுஞ்
சேணரசன் மகிழவுயிர் யாவையுங் காக்கைநஞ்
செயலென் றுணர்த்த வடிவாய்
விந்தமலை தாழ்த்துமுனி குண்டிகை கவிழ்ப்பவரு
விரிநீர ரூத பொன்னி
வெள்ளமோ வன்றிநின தன்பர்முழு குங்கருணை
வெள்ளமோ வுளவு புகலாய்
கந்தன்மா யூரகிரி கீழ்த்திசைக் கொண்டிடுங்
கழனிசூழ் பிள்ளை நகரிற்
கற்பாழி தனின்மேவு கற்பகவி நாயகா
கற்பனை கடந்த பொருளே. (8)

வாயார வாழ்த்திநின் றிருநாம நினைவாகி
மலரடி வணங்கி னோர்பால்
வன்கண்வெங் கூற்றஞ்சு மேனவக் கோள்களு
மற்றும்வந் தென்செய் வதே
தாயாவை யெவ்வுயிரை யும்புரந் திடுதலாற்
றருகல்வி சித்தி ஞானந்
தருதலாற் றந்தையே யாவையென் றுனதருள்
சதமென்று நம்பி யுள்ளே
தூயாத மூடனென் றகற்றிவிடு வாய்கொலோ
வருணகிரி நாதர் சொன்ன
வாரமுத மன்னசொற் கென்செய்வை யய்யனே
யாழிமாப் படையை யீட்பான்
காயாவை யனையதிரு மேனிமால் பரசிடக்
களித்தவா பிள்ளை நகரிற்
கற்பாழி தனின்மேவு கற்பகவி நாயகா
கற்பனை கடந்த பொருளே. (9)

## ஸ்ரீ கற்பக விநாயகர் பதிகம்.

எல்லாமு நினதுசெய லெப்பொருளு நினதென்ற
வெண்ணமே கொள்ள வேண்டு
மிரவுபக லெப்பொழுது மம்புயமெ னத்தகுநின்
னிணையடியி னினைவு வேண்டு
நல்லாரு ரைத்தசொற் கேட்டிடுதல் வேண்டுமவர்
நட்புமற வாமை வேண்டும்
நடலைவஞ் சனையுளோ ரிடத்திலுற வாயினு
நாடா திருத்தல் வேண்டும்
செல்லான நாளொழித் தினியேனு நின்புகழ்
செப்பநற் புத்தி வேண்டுஞ்
செந்தமிழ்ப் புலமைவர வேண்டுநின் பொருட்
செல்வமும் வேண்டு மரசே
கல்லாலி லுற்றபர னிகலத்து விளையாடு
கணேசனை பிள்ளை நகரிற்
கற்பாழி தனின்மேவு கற்பகவி நாயகா
கற்பனை கடந்த பொருளே. (10)

வாழிமறை நான்கு மழைபொழிக நாடெங்கு
மேழிவள மோங்கி விழாவுறுக—வாழையடி
வாழையெனத் தொண்டர்குலம் வந்திடுக பிள்ளைநகர்
வேழமுகன் றாள்வாழ்க வே.

...ப்பெற்றது.

